ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව / இலங்கைப் பரீட்சைத் திணைக்களம் / Department of Examinations, Sri Lanka

**இலங்கை சட்டக் கல்லூரியின் கல்வியாண்டு 2016 இற்கு மாணவர்களை**
**அனுமதிப்பதற்கான போட்டிப் பரீட்சை - 2015 செப்தெம்பர்**

Competitive Examination for Admission of students to Sri Lanka
Law College for Academic year 2016 - September 2015

**(01) மொழித்திறன் (தமிழ்)**
Language Skills (Tamil)

மூன்று மணித்தியாலங்கள்
Three hours

**பரீட்சார்த்திகளுக்கான அறிவுறுத்தல்கள்**

**மிக முக்கியம் :**




* விடை எழுதும்போது பின்வருமாறு இலக்கங்கள் எழுதப்படாத விடைத்தாள்கள் மதிப்பிடப்படமாட்டாது.

**1 2 3 4**

உமது சுட்டெண்ணை இங்கேயும் மூன்றாம் பக்கத்திலும் எழுதுக.

......................................

சரியானது என உறுதிப்படுத்துகின்றேன்.

......................................
நோக்குனரின் முதலெழுத்தொப்பம்

**முக்கியம் :**

* இவ்வினாத்தாள் **08** பக்கங்களில் **38** வினாக்களைக் கொண்டுள்ளது.

* விடைகளை எழுதமுன் வினாத்தாளைப் பக்க ஒழுங்கிற்கேற்ப ஒழுங்குபடுத்துக.

* **எல்லா** வினாக்களுக்கும் விடைகளை **இத்தாளிலேயே** எழுதுக.

* இவ்வினாத்தாளுக்குரிய நேரம் **மூன்று மணித்தியாலம்** ஆகும்.

* மண்டப மேற்பார்வையாளரின் அறிவித்தலின் பின்னரே விடைகளை எழுதத் தொடங்குக.

* **உமக்குத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கேற்ப விடைகளை எழுதுக. அறிவுறுத்தல்களுக்கு அமையாத விடைகளுக்குப் புள்ளிகள் வழங்கப்படமாட்டாது.**

* விடைகள் தரப்படாவிட்டாலும் வினாத்தாளை மண்டப மேற்பார்வையாளரிடம் கையளிக்க வேண்டும்

* **கறுப்பு** அல்லது **நீல** நிறப் பேனையினால் மாத்திரம் தெளிவாக விடைகளை எழுதுக. **பென்சிலைப் பயன்படுத்த வேண்டாம்.**

* இவ்வினாத்தாளைப் பரீட்சை மண்டபத்திற்கு வெளியே கொண்டு செல்லல், அதன் ஒளிப்பிரதியை எடுத்தல் என்பன குற்றமாகும்.

* **தெளிவற்ற இலக்கம், தெளிவற்ற கை எழுத்துகள், அழிக்கும் வெண்மைப் பயன்பாடு, பென்சிலைப் பயன்படுத்தி எழுதிய விடைகள் என்பவற்றுக்கு மதிப்பீட்டின்போது புள்ளிகள் வழங்கப்படமாட்டாது.**

**பரீட்சகரின் உபயோகத்திற்கு மட்டும்**

| பக்க எண் | வினா எண் | பெற்ற புள்ளிகள் |
|---|---|---|
| 2 | 1 - 13 | |
| 3 | 14 - 23 | |
| 4 | 24 - 35 | |
| 4 - 5 | 36 | |
| 5 - 6 | 37 | |
| 7 - 8 | 38 | |
| மொத்தம் | | |

**இறுதிப்புள்ளிகள்**

| | |
|---|---|
| இலக்கத்தில் | |
| எழுத்தில் | |

| | |
|---|---|
| விடைத்தாளைப் பரீட்சித்தவர் | |
| புள்ளிகளைப் பரீட்சித்தவர் | |

[பக் 2 ஐப் பார்க்க.

● **1** தொடக்கம் **3** வரையான வினாக்களில் பிழையாக எழுத்துக் கூட்டப்பட்ட சொல்லை அடையாளம் கண்டு அதன் **இலக்கத்தைப் புள்ளிக்கோட்டின்மீது** எழுதுக.

1. (1) அழைப்பாணை (2) ஆட்கொணர்வு (3) ஆட்சேபணை (4) சட்டத்தரணி (.........)

2. (1) அவதூறு (2) வம்சாவழி (3) வர்த்தமானி (4) பிணைமுறி (.........)

3. (1) தூண்டுகோள் (2) எடுகோள் (3) கடல்கோள் (4) கருதுகோள் (.........)

(03 புள்ளிகள்)

● **4** தொடக்கம் **6** வரையான வினாக்களில் நெடுங்கணக்கு அகரவரிசைக்குப் பொருத்தமாக அமையும் விடையைத் தெரிவு செய்து, அதன் **இலக்கத்தைப் புள்ளிக் கோட்டின்மீது** எழுதுக.

4. (அ) மனு (ஆ) பீடை (இ) சிறை (ஈ) கைதி
(1) இ, ஈ, ஆ, அ (2) ஈ, ஆ, அ, இ (3) ஈ, இ, ஆ, அ (4) ஈ, அ, ஆ, இ (.........)

5. (அ) சுமைதாங்கி (ஆ) சுவர்க்கம் (இ) சுகந்தம் (ஈ) சுமங்கலி
(1) ஈ, இ, அ, ஆ (2) இ, அ, ஈ, ஆ (3) அ, ஈ, இ, ஆ (4) இ, ஈ, அ, ஆ (.........)

6. (அ) தடாகம் (ஆ) தியாகம் (இ) தணிக்கை (ஈ) திறமை
(1) இ, அ, ஈ, ஆ (2) அ, இ, ஆ, ஈ (3) அ, ஆ, ஈ, இ (4) இ, ஆ, அ, ஈ (.........)

(03 புள்ளிகள்)

● **7** தொடக்கம் **9** வரையான ஒவ்வொரு வினாக்களில் தரப்பட்டுள்ள சொற்களைப் புணர்த்தினால் வரும் புணர் மொழியைத் தெரிவு செய்து, அதன் **இலக்கத்தைப் புள்ளிக் கோட்டின்மீது** எழுதுக.

7. நான்கு + நான்கு
(1) நன்னான்கு (2) நந்நான்கு (3) நன்நாங்கு (4) நான்குநான்கு (.........)

8. நூல் + நயம்
(1) நூல்நயம் (2) நூனயம் (3) நூன்னயம் (4) நூநயம் (.........)

9. பால் + குடம்
(1) பாற்க்குடம் (2) பால்க்குடம் (3) பால்குடம் (4) பாற்குடம் (.........)

(03 புள்ளிகள்)

● வினா **10** இல் மாறியுள்ள எழுத்துக்களை ஒழுங்குபடுத்தினால் கருத்துள்ள சொல் வரும். அதனைப் **புள்ளிக் கோட்டின்மீது** எழுதுக.

10. தா, ட், ன, கூ, த், ம், டு, ப (.......................................)

(01 புள்ளி)

● **11** தொடக்கம் **15** வரையான வினாக்களில் தரப்பட்டுள்ள வாக்கியங்கள் பிழையாயின் திருத்தி மீண்டும் **புள்ளிக் கோட்டின்மீது** எழுதுக. சரியாயின் சரி எனப் **புள்ளிக் கோட்டின்மீது** எழுதுக.

11. மாணவர் சிலர் குழப்பஞ் செய்வதற்குக் காரணம் சந்தர்ப்பவாதிகள் அவர்களைத் தவறான வழியில் இட்டுச் செல்கின்றனர்.

.......................................................................................................................................

12. பல்கலைக்கழக மூதவை அங்கத்தவர்கள் யாவரும் அன்று கூட்டத்திற்குச் சமுகமளித்திருந்தனர்.

.......................................................................................................................................

13. இக்கல்லூரியில் இடம்பெறும் செயற்பாடுகள் ஒவ்வொன்றும் மாணவரைச் சமூகமயப்படுத்த ஏற்றதாய் இருக்கின்றது.

.......................................................................................................................................

[பக் 3 ஐப் பார்க்க.

422

14. பாரதியாரது கவிதைகள் அடங்கிய தொகுப்பு மீண்டும் வெளிவந்துவிட்டது.

..........................................................................................................

15. குமரன் கல்வியறிவு ஒழுக்கத்திற் சிறந்தவன்

..........................................................................................................

(05 புள்ளிகள்)

● **16** தொடக்கம் **20** வரையான வினாக்களில் தரப்பட்டுள்ள மரபுச் சொற்றொடர்கள் ஒவ்வொன்றும் தரும் சரியான கருத்தைத் தெரிவு செய்து, அதன் **இலக்கத்தைப் புள்ளிக் கோட்டின்மீது** எழுதுக.

16. பம்பரமாட்டுதல்
(1) துன்புறுத்துதல் (2) செருக்கடக்குதல்
(3) அலைக்கழித்தல் (4) தன்வயப்படுத்தல் (.........)

17. பட்டுத்தேறுதல்
(1) துன்பத்திலிருந்து விடுபடல் (2) அனுபவத்தினால் தெளிதல்
(3) அறிவுண்டாதல் (4) அவமானத்தைச் சகித்தல் (.........)

18. ஆசாடபூதி
(1) மதிப்பிழந்தவன் (2) ஆசாரமுடையவன்
(3) உலகியல் பற்றற்றவன் (4) ஏமாற்றுக்காரன் (.........)

19. இட்டுக்கட்டுதல்
(1) இல்லாததை ஏற்றிச் சொல்லுதல் (2) வீண் வதந்தி பரப்புதல்
(3) ஒன்றை விபரமாகச் சொல்லுதல் (4) வற்புறுத்தி பொறுப்பாளியாக்குதல் (.........)

20. நாக்குநரம்பற்றவன்
(1) கொடுத்த வாக்கை மீறுபவன் (2) அளவுகடந்து பேசுபவன்
(3) பேச்சில் உறுதியற்றவன் (4) கோள் சொல்பவன் (.........)

(05 புள்ளிகள்)

● **21** தொடக்கம் **23** வரையிலான ஒவ்வொரு வினாக்களில் தரப்பட்டுள்ள பழமொழிகள் ஒவ்வொன்றும் தரும் கருத்தினைத் தெரிவு செய்து அதன் **இலக்கத்தைப் புள்ளிக் கோட்டின்மீது** எழுதுக.

21. அற்ப ஆசை கோடி தரித்திரம்
(1) ஆசைப்படலாம்; அது பேராசையாகிவிடக்கூடாது.
(2) ஆசைதான் துன்பத்திற்குக் காரணம்
(3) தகாத ஆசை பெரும் கெடுதியில் முடியும்
(4) வறுமைக்கு காரணம் ஆசையே (.........)

22. கெடுகுடி சொற்கேளாது
(1) தீயவழி முடிவில் அழிவையே தரும்
(2) தீயவழியை நாடுபவர் நற்புத்தி கேளார்
(3) மூத்தோர் அறிவுரை பெறுமதிமிக்கது
(4) குடிக்கு அடிமையானோர் பிறர் சொற்கேளார் (.........)

23. மழைக்கால இருட்டென்றாலும் மந்தி கொப்பிழக்கப்பாயாது
(1) எவ்வித இக்கட்டிலும் தம்மியல்பினின்றும் சிலர் விலகார்
(2) இக்கட்டான சூழலில் முன்னெச்சரிக்கை அவசியம்
(3) பயிற்சி இருப்பின் எதனையும் எப்பொழுதும் சாதிக்கலாம்
(4) கொப்பு விட்டு கொப்பு தாவுதல் மந்தியின் இயல்பாகும் (.........)

(03 புள்ளிகள்)

[பக் 4 ஐப் பார்க்க.

● **24** தொடக்கம் **26** வரையான வினாக்களில் தரப்பட்டுள்ள சொற்கள் ஒவ்வொன்றினதும் ஒத்த கருத்தைத் தரும் சொல்லைத் தெரிவு செய்து அதன் **இலக்கத்தைப் புள்ளிக் கோட்டின்மீது** எழுதுக.

24. குரிசில்
(1) தலைவன் (2) நிபுணன் (3) நண்பன் (4) வழிகாட்டி (.........)

25. கெழுதகைமை
(1) தற்பெருமை (2) நெருங்கிய நட்பு (3) உயர்பதவி (4) பெரும்புகழ் (.........)

26. கயமை
(1) கீழ்மை (2) பெருமை (3) பொறுமை (4) பொறாமை (.........)
(03 புள்ளிகள்)

● **27** தொடக்கம் **29** வரையான வினாக்களில் தரப்பட்டுள்ள சொற்கள் ஒவ்வொன்றினதும் எதிர்ப் பொருள் தரும் சொல்லைத் தெரிவு செய்து அதன் **இலக்கத்தைப் புள்ளிக் கோட்டின்மீது** எழுதுக.

27. சாரம்
(1) விசாரம் (2) ஆசாரம் (3) சாறு (4) சக்கை (.........)

28. அலர்தல்
(1) மறைதல் (2) உதிர்தல் (3) கவிதல் (4) காய்தல் (.........)

29. நிராகரித்தல்
(1) பகிஷ்கரித்தல் (2) அங்கீகரித்தல் (3) அமுலாக்குதல் (4) முன்மொழிதல் (.........)
(03 புள்ளிகள்)

● **30** தொடக்கம் **32** வரையான வினாக்களில் முதலில் தரப்பட்டுள்ள சொற்களுடன் **பொருந்தாத** சொல்லைத் தெரிவு செய்து அதன் **இலக்கத்தைப் புள்ளிக் கோட்டின்மீது** எழுதுக.

30. மாட்சி
(1) தகைமை (2) மாண்பு (3) வலிமை (4) பீடு (.........)

31. வேதம்
(1) மறை (2) சுருதி (3) ஆரணம் (4) வாரணம் (.........)

32. தடாகம்
(1) பொய்கை (2) பொழில் (3) குளம் (4) ஏரி (.........)
(03 புள்ளிகள்)

● **33** தொடக்கம் **35** வரையான வினாக்களில் தரப்பட்டுள்ள சொற்கூட்டங்கள் ஒவ்வொன்றுக்கும் பொருத்தமான தனிச் சொல்லைத் தெரிவு செய்து அதன் **இலக்கத்தைப் புள்ளிக் கோட்டின்மீது** எழுதுக.

33. எடுத்த எடுப்பிலே விரைவாகக் கவிபாடும் திறமையுடையோன்
(1) வரகவி (2) ஆசுகவி (3) விகடகவி (4) வித்தாரகவி (.........)

34. வழக்கொன்றில் எதிர் வழக்காளியாக விளங்குபவன்
(1) வாதி (2) நியாயவாதி (3) பிரதிவாதி (4) யதார்த்தவாதி (.........)

35. ஆயிரம் யானைகளைக் கொன்ற வீரன் ஒருவனது புகழ்பாடும் பிரபந்தவகை
(1) உலா (2) கோவை (3) கலம்பகம் (4) பரணி (.........)
(03 புள்ளிகள்)

36. பின்வரும் உரைப்பகுதியை வாசித்து அதன் கீழ் தரப்பட்டுள்ள வினாக்களுக்குச் சுருக்கமாக விடை தருக.

இனிக் கலையறிவின் மேம்பாட்டால் மட்டும் ஒரு நாடு உன்னத நிலை அடைய இயலாது. உயர்ந்த மக்கட் பண்புகள் இல்லையேல் அதனாற் சிறிதும் பயனின்றாம். ஆகவே மக்களின் மனப் பண்பாடுகளை இனிக் கூறுகிறார் கம்ப நாடர். அப்பண்புகள் தவம், அன்பு, அருள், தருமம் முதலியனவாகும். அயோத்தி நகரான தனி மரத்துக்கு அதன் செழிப்பைத் தோற்றுவிக்குந் தழைகுழைகளாயுள்ளது தவமே என்பார், 'அருந்தவத்தின் சாகந்தழைத்து' என்றார். தவமாவது - மனம் பொறிவழிப் போகாது நிற்றற் பொருட்டு விரதங்களை மேற்கொண்டு, அவற்றால் தமக்கு வரும் துன்பங்களைப் பொறுத்தலும் பிறவுயிர்களை ஓம்புதலுமேயாகும். இத்தவத்துக்குப் பிற நற்குணங்களும் வேண்டுமாயினும்,

" உற்றநோய் நோன்றல் உயிர்க் குறுகண் செய்யாமை
யற்றே தவத்திற் குரு"

என துன்பம் பொறுத்தலும் அஹிம்ஸையுமே சிறப்புடையன என்பர் வள்ளுவனார். இத்தகைய தவமான தழைகளினிடையில் உண்டாவதே அன்பாகிய அரும்பு என்று உருவகிக்கின்றார் நம் கவியரசர். அன்பு என்றதால், அதனிலிருந்து பெருகும் அருளுங் கொள்ளப்படும். தொடர்புடையாரிடம் செலுத்துவது அன்பென்றும், தொடர்பின்றி எல்லாவுயிர்களிடமும் இயல்பாகவே செல்வது அருளென்றும் அறிக.

[பக் 5 ஐப் பார்க்க.

" அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னும்
செல்வச் செவிலியா லுண்டு"

என்பதனால், அன்பினின்று வளர்ந்ததே அருளென்றும் அவ்வருள் தரும ரூபமாகத் தோன்றுவதற்குச் செல்வப் பொருளே காரணம் என்றும் வள்ளுவனார் கூறுதல் இங்கறியத் தக்கது. ஆகவே 'அன்பும் அருளுமே, அரும்பும் போதுமாகிப் பின் அறமாக மலர்வது என்ற கருத்தில், அன்பரும்பித் தரும மலர்ந்து' எனப்பட்டது. கடுந்தவம் புரிந்து பிரமனாதியோராற் பெருவரங்கள் பெற்றபின் அன்பும் அருளும் நீங்கித் தருமக்கேடு புரிந்த தீயோர், முன்பும் பலருண்டு; இரணியன் இராவணனாதியோர் இத்தகையவரே.

(i) கம்பநாடாரின் கருத்துப்படி ஒரு நாட்டின் சிறப்பிற்கு வேண்டப்படுபவை எவை?

........................................................................................................................................

........................................................................................................................................

........................................................................................................................................

........................................................................................................................................

(ii) தவம் பற்றிக் கம்பர் கூறியதையும் வள்ளுவர் கூறியுள்ளதையும் ஒப்புநோக்குக.

........................................................................................................................................

........................................................................................................................................

........................................................................................................................................

........................................................................................................................................

(iii) தவமான தழை, அருளென்னும் அன்பீன் குழவி, பொருளென்னும் செல்வச் செவிலி ——— இத்தொடர்களில் கையாளப்பட்டுள்ள அணிகளை விளக்குக.

........................................................................................................................................

........................................................................................................................................

........................................................................................................................................

........................................................................................................................................

(iv) மக்களின் மனப்பாங்குகளான தவம், அன்பு, அருள், தருமம், என்பவற்றிற்கிடையே காணப்படும் தொடர்பு யாது?

........................................................................................................................................

........................................................................................................................................

........................................................................................................................................

........................................................................................................................................

(v) இவ்வுரைப்பகுதியூடாகக் கட்டுரையாசிரியர் கூற விளையும் பிரதான கருத்தினை உமது மொழிநடையில் சுருக்கமாகக் குறிப்பிடுக.

........................................................................................................................................

........................................................................................................................................

........................................................................................................................................

........................................................................................................................................

(3× 5 =15 புள்ளிகள்)

37. பின்வரும் உரைப்பகுதியை வாசித்து அதன் சாராம்சத்தை **மூன்றில் ஒரு பகுதியாகச் சுருக்கி** எழுதுக. சுருக்கத்துக்குப் பொருத்தமான **தலையங்கம்** இடுக. சுருக்கத்தின் **இறுதியில் சொற்களின் எண்ணிக்கையைக்** குறிப்பிடுக.

ஒவ்வொரு சமூகத்திலும் ஏதோவொரு காலப்பகுதியில், அதனுடைய தனித்துவமான, பரந்த, ஆனால் தெளிவான ஒழுக்கத்தைப் பற்றிய உணர்வு இருந்து கொண்டு இருக்கும். சில வேளைகளில் இது காலத்துடன் மாறும் தன்மையினைக் கொண்டுள்ளது. "மேற்கில் ஒழுக்கம் குறைந்து வருகின்றது" என்று நாம் விமர்சனம் செய்யும் பொழுது, நாம் பின்பற்றும் ஒழுக்கத்திலிருந்து வித்தியாசப்படுத்தப்படுவதும், எங்களால் அங்கீகரிக்கப்படாததுமான ஒன்றாக அது இருப்பினும், மேற்கத்திய வழக்கிலுள்ள ஓர் ஒழுக்கமுறையினையே நாம் குறிப்பிடுகிறோம்.

சட்டமும் சமயமும் ஒன்றன் மீது ஒன்று படிந்திருப்பது போன்று சட்டமும் ஒழுக்கமும் ஒன்றில் ஒன்று படிந்திருக்கின்றது. சட்டமுரணான விடயங்களாகக் கருதப்படும் கொலை, திருட்டு என்பன பெரும்பாலான மக்களால் ஒழுக்கமற்ற

[பக் 6 ஐப் பார்க்க.



செயல்களாகவே கருதப்படுகின்றன. சட்டத்திற்கும் ஒழுக்கத்திற்கும் இடையில் ஆச்சரியப்படத்தக்க ஒற்றுமைகள் இருப்பதுடன் ஒன்றுடன் ஒன்று தொடர்புபட்டவையாகவும் இருக்கின்றன. இவை இரண்டும் சமூகத்தின் இலகுவான செயற்பாட்டிற்கான நடத்தைப் பிரமாணங்களை விதிக்கும் நடத்தைக் கோவைகளாகும். மக்கள் சட்டத்தைப் பின்பற்றவே விரும்புகின்றார்கள், அதனை மீறுவதற்கல்ல. ஏனெனில், அவை ஒழுக்க ரீதியாகச் சரியானது எனக் கருதுகின்றார்கள். இதற்கு மேலாக எவராவது ஒருவர் இன்னொருவருக்கு குற்றம் புரிய வேண்டாம் என ஆலோசனை வழங்க விரும்பினால், அதாவது யாரோ ஒருவரை அடிக்கும் பொழுது, அச்செயல் சட்ட முரணானதாகவும் ஒழுக்கத்தினை மீறுவதாகவும் சொல்லி, அத்தவறைப் புரியாமல் இருப்பதற்கு மேலும் வலுவானதொரு காரணத்தை காட்டக் கூடியதாகவும் இருக்கின்றது.

எவ்வாறாயினும், ஒன்று மற்றொன்றின் மீது படிந்திருக்கும் சந்தர்ப்பங்கள் தவிர ஏனைய பல விடயங்களில் சட்டமும் ஒழுக்கமும் முற்றிலும் வேறுபட்ட பகுதிகளைக் கொண்டிருக்கின்றன. மேலே உள்ளவற்றைப் பார்க்கும் போது ஒழுக்கம் அல்லது ஒழுக்கமற்ற விடயங்களையும் சட்டம் ஒழுங்குபடுத்துகின்றது. அதே வேளையில் சில சந்தர்ப்பங்களில் தலையிடுதல் ஒழுக்கத்திற்கு உட்பட்டது எனக் கருதுமிடத்து அச்சட்டமானது தலையிடுவதிலிருந்து தவிர்த்துக் கொள்கிறது. அடிக்கடி குறிப்பிடப்படுகின்ற ஒரு உதாரணம் நீரில் மூழ்கிக் கொண்டிருக்கும் குழந்தையை தாண்டிச் செல்லும் ஒரு நபர் அக்குழந்தையை தனக்கெவ்வித பாதிப்பும் அற்ற வகையில் காப்பாற்றக்கூடியதாக இருந்தும் அவ்வாறு காப்பாற்றத் தவறினால் அச்செயல் ஒழுக்கமற்றதாகக் கருதப்படலாம். பொதுவாக, இலகுவாக உயிரைக் காப்பாற்றக்கூடியதாக இருந்தால் ஒழுக்கம் உயிரைக் காப்பாற்றுவதற்கு கட்டளையிடுகின்றது. ஆனால், சட்டத்தின் கண்களில் இக் குழந்தையைக் காப்பாற்றத் தவறியது முழுமையாக ஏற்றுக் கொள்ளப்படக்கூடியது. வேறு முறையில் சொல்வதானால் இச்செயல் சட்டமுறையானதாக இருக்கின்றது.

................................................................................................................................................................

................................................................................................................................................................

................................................................................................................................................................

................................................................................................................................................................

................................................................................................................................................................

................................................................................................................................................................

................................................................................................................................................................

................................................................................................................................................................

................................................................................................................................................................

................................................................................................................................................................

................................................................................................................................................................

................................................................................................................................................................

................................................................................................................................................................

................................................................................................................................................................

................................................................................................................................................................

................................................................................................................................................................

................................................................................................................................................................

................................................................................................................................................................

................................................................................................................................................................

................................................................................................................................................................

................................................................................................................................................................

(25 புள்ளிகள்)

[பக் 7 ஐப் பார்க்க.

38. பின்வரும் தலைப்புக்களில் **ஒன்றைத்** தெரிவு செய்து ஏறத்தாழ **300** சொற்களில் பகுப்பாய்வுக் கட்டுரை ஒன்று எழுதுக.

(i) சட்டத்தின் சுதந்திரத்தை செல்வத்தினாலோ அதிகாரத்தினாலோ அடக்கிவிட முடியாது.

(ii) சமூகத்தில் குற்றங்களை ஒழிப்பதற்காக சட்டத்தை மட்டும் பயன்படுத்துவதன் பொருத்தப்பாடு

(iii) நவீனமயமாதலினால் இலங்கைச் சமூகத்தில் சீரழிந்து செல்லும் விழுமியங்களும் பாரம்பரியங்களும்

(iv) உலகின் வல்லரசுகள் சிறிய நாடுகளுடன் இணைவதால் ஏற்படும் நன்மைகளும் தீமைகளும்

[பக் 8 ஐப் பார்க்க.

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව / இலங்கைப் பரீட்சைத் திணைக்களம் / Department of Examinations, Sri Lanka

இலங்கை சட்டக் கல்லூரியின் கல்வியாண்டு 2016 இற்கு மாணவர்களை அனுமதிப்பதற்கான போட்டிப் பரீட்சை - 2015 செப்தெம்பர்

Competitive Examination for Admission of students to Sri Lanka Law College for Academic year 2016 - September 2015

**(02) பொது அறிவு மற்றும் நுண்ணறிவு**
General Knowledge and Intelligence

இரண்டு மணித்தியாலங்கள்
*Two hours*

**பரீட்சார்த்திகளுக்கான அறிவுறுத்தல்கள்**

**மிக முக்கியம் :**




✳ **விடை எழுதும்போது பின்வருமாறு இலக்கங்கள் எழுதப்படாத விடைத்தாள்கள் மதிப்பிடப்படமாட்டாது.**

**1 2 3 4**

உமது சுட்டெண்ணை இங்கேயும் மூன்றாம் மற்றும் ஐந்தாம் பக்கங்களிலும் எழுதுக.

......................................

சரியானது என உறுதிப்படுத்துகின்றேன்.

......................................

நோக்குனரின் முதலெழுத்தொப்பம்

**முக்கியம்:**

✳ இவ்வினாத்தாள் **12** பக்கங்களில் **100** வினாக்களைக் கொண்டுள்ளது.

✳ விடைகளை எழுதமுன் வினாத்தாளைப் பக்க ஒழுங்கிற்கேற்ப ஒழுங்குபடுத்துக.

✳ **எல்லா** வினாக்களுக்கும் விடைகளை **இத்தாளிலேயே** எழுதுக.

✳ இவ்வினாத்தாளுக்குரிய நேரம் **இரண்டு மணித்தியாலம்** ஆகும்.

✳ மண்டப மேற்பார்வையாளரின் அறிவித்தலின் பின்னரே விடைகளை எழுதத் தொடங்குக.

✳ **உமக்குத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கேற்ப விடைகளை எழுதுக. அறிவுறுத்தல்களுக்கு அமையாத விடைகளுக்குப் புள்ளிகள் வழங்கப்படமாட்டாது.**

✳ **கணிப்பான்களைப் பயன்படுத்த முடியாது.**

✳ விடைகள் தரப்படாவிட்டாலும் வினாத்தாளை மண்டப மேற்பார்வையாளரிடம் கையளிக்க வேண்டும்

✳ **கறுப்பு** அல்லது **நீல** நிறப் பேனையினால் மாத்திரம் தெளிவாக விடைகளை எழுதுக. **பென்சிலைப் பயன்படுத்த வேண்டாம்.**

✳ இவ்வினாத்தாளைப் பரீட்சை மண்டபத்திற்கு வெளியே கொண்டு செல்லல், அதன் ஒளிப்பிரதியை (photocopy) எடுத்தல் என்பன குற்றமாகும்.

✳ **தெளிவற்ற இலக்கம், தெளிவற்ற கை எழுத்துகள், அழிக்கும் வெண்மைப் பயன்பாடு, பென்சிலைப் பயன்படுத்தி எழுதிய விடைகள் என்பவற்றுக்கு மதிப்பீட்டின்போது புள்ளிகள் வழங்கப்படமாட்டாது.**

**பரீட்சகரின் உபயோகத்திற்கு மட்டும்**

| பக்க எண் | வினா எண் | பெற்ற புள்ளிகள் |
|---|---|---|
| 2 | 1 - 8 | |
| 3 | 9 - 20 | |
| 4 | 21 - 30 | |
| 5 | 31 - 43 | |
| 6 | 44 - 55 | |
| 7 | 56 - 62 | |
| 8 | 63 - 70 | |
| 9 | 71 - 76 | |
| 10 | 77 - 84 | |
| 11 | 85 - 91 | |
| 12 | 92 - 100 | |
| மொத்தம் | | |

**இறுதிப்புள்ளிகள்**

| | |
|---|---|
| இலக்கத்தில் | |
| எழுத்தில் | |

| | |
|---|---|
| விடைத்தாளைப் பரீட்சித்தவர் | |
| புள்ளிகளைப் பரீட்சித்தவர் | |

[பக் 2 ஐப் பார்க்க

## பகுதி I - பொது அறிவு

● **1** தொடக்கம் **30** வரையுள்ள ஒவ்வொரு வினாவிற்குமான **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான விடையைத்** தெரிவு செய்து அதற்குரிய தெரிவினது **இலக்கத்தை** வினாவின் எதிரேயுள்ள **புள்ளிக் கோட்டின் மீது** எழுதுக.

1. சட்டமியற்றல், அமுலாக்கம், பொருள்விளக்கம் போன்ற ஒவ்வொரு பணிக்கும் பொறுப்பாகச் செயற்படும் நிறுவகங்களைச் சரியான ஒழுங்குமுறையில் குறிப்பிடுவது கீழேயுள்ள எதுவாகும்?
   (1) நீதித்துறை, ஆட்சித்துறை, சட்டமன்றம்
   (2) சட்டமன்றம், ஆட்சித்துறை, நீதித்துறை
   (3) சட்டமன்றம், நீதித்துறை, ஆட்சித்துறை
   (4) ஆட்சித்துறை, சட்டமன்றம், நீதித்துறை (.........)

2. 2014 ஆம் ஆண்டின் இலங்கை மத்திய வங்கியின் அறிக்கையில் உள்ளடக்கப்பட்ட அடிப்படைச் சமூக சுட்டியில் இலங்கையரினது வாழ்க்கைப் பண்புத்தரம் (Quality of Life) தொடர்பான **தவறான** சமூக சுட்டி இவற்றுள் எது?
   (1) எழுத்தறிவு வீதம் 92.5%
   (2) பிறப்பில் இருந்து ஆயுள் எதிர்பார்க்கை 74.3
   (3) நாளொன்றிற்கு உள்ளெடுக்கப்படும் சராசரி கிலோ கலோரியினது அளவு 2111
   (4) சராசரி மாதாந்த வருமானம் ரூபாய் 30 814 (.........)

3. 1978 ஆம் ஆண்டின் இலங்கை சனநாயக சோஷலிச குடியரசின் அரசியல்யாப்பு சட்டத்திற்கு ஏற்ப உயர் நீதிமன்ற யாப்பு பற்றிய சரியான கூற்று இவற்றுள் எது?
   (1) பிரதம நீதியரசரோடு நான்கு பேருக்கு குறையாத ஒன்பது பேருக்கு கூடாத எண்ணிக்கையைக் கொண்ட வேறு நீதியரசர்களைக் கொண்டிருக்க வேண்டும்.
   (2) பிரதம நீதியரசரோடு ஐந்து பேருக்கு குறையாத எட்டு பேருக்கு கூடாத எண்ணிக்கையைக் கொண்ட வேறு நீதியரசர்களைக் கொண்டிருக்க வேண்டும்.
   (3) பிரதம நீதியரசரோடு ஆறு பேருக்கு குறையாத பத்து பேருக்கு கூடாத எண்ணிக்கை கொண்ட வேறு நீதியரசர்களைக் கொண்டிருக்க வேண்டும்.
   (4) பிரதம நீதியரசரோடு ஏழு பேருக்கு குறையாத பன்னிரெண்டு பேருக்கு கூடாத எண்ணிக்கை கொண்ட வேறு நீதியரசர்களைக் கொண்டிருக்க வேண்டும். (.........)

4. 1815 ஆம் ஆண்டின் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த கண்டி உடன்படிக்கை எந்த பிரித்தானியா ஆளுநரின் நிர்வாகத்தில் கையொப்பமிடப்பட்டது?
   (1) சேர் தோமஸ் மெயிற்லண்ட (2) சேர் பிரடெரிக் நோர்த்
   (3) சேர் றொபட் பிறவுண்ரிக் (4) சேர் எட்வேட் பான்ஸ் (.........)

5. எந்த வருடத்திலிருந்து இலங்கையின் அரசகருமமொழியாக தமிழ்மொழி ஏற்றுக்கொள்ளப்பட்டது?
   (1) 1956 (2) 1965 (3) 1978 (4) 1987 (.........)

6. இலங்கையிலே நிலவும் தற்போதைய சட்டத்திற்கேற்ப சமாதான நீதிவான்களை நியமிக்கும் அதிகாரம் பின்வருவோரில் யாருக்கு வழங்கப்பட்டுள்ளது?
   (1) சட்டமாஅதிபர் (2) பிரதம நீதியரசர்
   (3) நீதி அமைச்சர் (4) பிரதம மந்திரி (.........)

7. 2012 ஆம் ஆண்டின் தொகைமதிப்பீடு மற்றும் புள்ளிவிபரவியல் திணைக்களத்தினால் நடாத்தப்பட்ட கணக்கெடுப்பிற்கு ஏற்ப இலங்கையிலே 100 000 இற்கும் குறைந்த குடிப்பரம்பல் உள்ள **இரு** மாவட்டங்களும் இவற்றுள் எவையாகும்?
   (1) மன்னார் மற்றும் முல்லைத்தீவு (2) கிளிநொச்சி மற்றும் வவுனியா
   (3) முல்லைத்தீவு மற்றும் திருகோணமலை (4) மன்னார் மற்றும் அம்பாறை (.........)

8. “கைது செய்யப்பட்ட நபரொருவர் குறிப்பிட்ட காலப்பகுதிக்குக் கூடுதலாக சிறையில் வைத்திருக்கக்கூடுமாவது நீதிமன்றில் நீதிபதி ஒருவர் அது சரியானதென தீர்மானிக்கும் வரையில் மட்டுமேயாகும்”. என்ற சட்டம் பிரகடனப்படுத்தப்பட்டுள்ள கட்டளை பின்வருவனவற்றுள் எது?
   (1) சர்டியோரானி (certiorari) (2) ஆட்கொணர்வு மனு (Habeas Corpus)
   (3) ஆணையீட்டெழுத்தாணை (Mandamus) (4) க்வோ எழுத்தாணை (Quo - warranto) (.........)

[பக் 3 ஐப் பார்க்க.

0279

9. 2015 ஆம் ஆண்டு மே மாதத்திலே பாராளுமன்றத்தால் நிறைவேற்றப்பட்ட இலங்கை சனநாயக சோஷலிச குடியரசு அரசியல் யாப்பு சட்டத்தின் 19 ஆவது திருத்தத்திற்கேற்ப அமைக்கப்படவுள்ள அரசியல் யாப்பு சபையின் மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கை எவ்வளவு?
(1) 8  (2) 10  (3) 12  (4) 15  (.........)

10. இலங்கையின் முதலாவது சட்டவாக்க சபை பிரித்தானிய நிர்வாக காலத்தின்போது பின்வரும் எந்த அரசியலமைப்பு சீர்திருத்தத்தின் மூலம் இந்நாட்டில் அமுல்செய்யப்பட்டது?
(1) கோல்புறூக்  (2) மனிங்  (3) டொனமூர்  (4) சோல்பரி  (.........)

11. கீழே தரப்பட்டவற்றில் இலங்கையின் வரலாற்றிலே மிக முக்கியத்துவம் பெறும் வருடங்கள் **அதிக** எண்ணிக்கையில் உள்ளடக்கப்பட்டிருக்கும் வரிசை எது?
(1) 1505 , 1796 , 1815 , 1848 , 1931 , 1948 , 1956 , 1972
(2) 1505 , 1796 , 1815 , 1818 , 1933 , 1948 , 1978 , 1994
(3) 1505 , 1796 , 1802 , 1818 , 1848 , 1948 , 1972 , 1994
(4) 1505 , 1796 , 1802 , 1831 , 1931 , 1948 , 1956 , 1978  (.........)

12. இலங்கையினுள் நீதித்துறைத் தொகுதிக்குப் புறம்பாகப் பிணக்குகளைத் தீர்ப்பதற்காக நிறுவப்பட்டுள்ள நிறுவனமொன்றாக **அமையாதது** இவற்றுள் எதுவாகும்?
(1) தொழில் நியாயசபை  (2) மனித உரிமைகள் ஆணைக்குழு
(3) இணக்கசபை  (4) சட்ட உதவி ஆணைக்குழு  (.........)

13. மத்தியகாலப்பகுதியில் அராபிய வர்த்தகர்கள் இலங்கையை எப்பெயரால் அழைத்தனர்?
(1) தப்ரபேன் (Taprobane)  (2) செரன்டிப் (Serendib)
(3) செயிலோ (Ceilo)  (4) சிமுண்டு (Simundu)  (.........)

14. குற்றஞ்சாட்டப்பட்ட சந்தேக நபரொருவரை சரியாக இனங்காண்பதற்கு அடையாள அணிவகுப்பு இவர்களுள் யாரினால் நடாத்தப்படும்?
(1) பொலிஸ் அத்தியட்சகர்  (2) நீதவான்
(3) உயர் நீதிமன்ற நீதிபதி  (4) மேல்நிலை நீதிமன்ற நீதிபதி  (.........)

15. "இயற்கையை வெற்றி கொள்ள வேண்டும்" என்ற இக் கோட்பாடு எக்கலாச்சாரம் மூலம் உருவாக்கப்பட்டது?
(1) சீன  (2) இஸ்லாமிய
(3) இந்திய  (4) ஐரோப்பிய  (.........)

16. உலக மக்களிடையே புரட்சிகர அரசியல் கருத்துவாதத்தை ஏற்படுத்தக் காரணமாக அமைந்த நூல் எது?
(1) த ரிபப்ளிக் (The Republic)  (2) த பிரின்ஸ் (The Prince)
(3) தாஸ் கபிட்டல் (Das Kapital)  (4) மெயின் காம்ப் (Mein Kampf)  (.........)

17. பின்வருவனவற்றுள் **பொருந்தாத** சோடி எது?
(1) சல்மான் ருஷ்தி - நாவல்  (2) பேட்டோல்ட் பிறேஸ்ட் - நாடகம்
(3) அமத்தயா சென் - சங்கீதம்  (4) அகிரா குரோசோவா - சினிமா  (.........)

18. இந்திய உளவுத் துறை சேவையின் சுருக்கப் பெயர் யாது?
(1) IS1  (2) RAW  (3) KGB  (4) FBI  (.........)

19. "கண்ணுக்கு கண்" என்ற சட்டத்தை அமுல்படுத்தினால் முழு உலகமுமே குருடாகிவிடும் என்ற பிரபலமான கூற்றை கூறியவர்
(1) மகாத்மாகாந்தி  (2) நெல்சன் மண்டேலா
(3) அன்னை தெரேசா  (4) மாட்டின் லூதர் கிங்  (.........)

20. ஐக்கிய நாடுகள் அபிவிருத்தி வேலைத்திட்டத்தின் (UNDP) 1990 ஆம் ஆண்டின் முன்வைக்கப்பட்ட மனித அபிவிருத்தி சுட்டியில் **உள்ளடக்கப்படாத** குறிகாட்டி எது?
(1) ஆயுள் எதிர்பார்க்கை  (2) கல்வி
(3) மொத்த தேசிய வருமானம்  (4) சனநாயகம்  (.........)

[பக் 4 ஐப் பார்க்க.

21. குணப்படுத்த முடியாத நோயொன்றினால் துன்பப்படுவோர் நோவில்லா சாவு அடைவதை (euthanasia) சட்டபூர்வமாக்கிய நாடுகளை மட்டும் கொண்ட வரிசை இவற்றுள் எது?
(1) சுவிற்சர்லாந்து, பெல்ஜியம், நெதர்லாந்து, லக்சம்பேர்க்
(2) சுவிற்சர்லாந்து, பெல்ஜியம், நெதர்லாந்து, பெரிய பிரித்தானியா
(3) சுவிற்சர்லாந்து, பெல்ஜியம், நெதர்லாந்து, இத்தாலி
(4) சுவிற்சர்லாந்து, பெல்ஜியம், நெதர்லாந்து, போர்த்துக்கல் (.........)

22. எந்த வருடத்தில் ஐக்கிய நாடுகள் சபையினால் மனித உரிமைகள் தொடர்பான சர்வதேசப் பிரகடனம் வெளிப்படுத்தப்பட்டது?
(1) 1945 (2) 1946 (3) 1947 (4) 1948 (.........)

23. 2016 ஆம் ஆண்டிலே உலக கால்பந்து போட்டிகள் நடைபெறுவதற்கு உத்தேசிக்கப்பட்டுள்ள நாடு எது?
(1) கொலம்பியா (2) ஜேர்மனி (3) ஸ்பானியா (4) ஆஜென்ரீனா (.........)

24. பெரிய பிரித்தானியாவின் பிரபலம் பெற்ற சில்கொட் அறிக்கைக்கு (Chilcot Report) அடிப்படையான பிரச்சினை இவற்றுள் யாது?
(1) ஈராக்கின் ஆக்கிரமிப்பு
(2) மத்திய கிழக்கு நாடுகளிலிருந்து புலம் பெயர்வோர்
(3) பாராளுமன்ற உறுப்பினர்களுக்கான ஒழுக்கக் கோவை
(4) ஸ்கொட்லாந்தின் மக்கள் கருத்துக் கணிப்பீடு (.........)

25. "டிஜிட்டல் பிரிப்பு (Digital-Divide)" என்பதால் கருதப்படுவது இவற்றுள் எதுவாகும்?
(1) அண்மையில் விருத்தி செய்யப்பட்ட கணித சூத்திரம்.
(2) ஐக்கிய அமெரிக்க அரசுகளினால் அறிமுகஞ் செய்யப்பட்ட புதிய தொழினுட்பகருவி.
(3) தொழினுட்ப ரீதியில் வளர்ச்சியுற்ற மற்றும் வளர்ச்சியடையாத நாடுகளுக்கு இடையிலான பிரிவு.
(4) புதிய செல்லிடப்பேசிகளின் ஒரு புதிய வகைப்படுத்தல். (.........)

26. மனித உடலிலுள்ள மிகப் பெரிய உறுப்பு எது?
(1) ஈரல் (2) மூளை (3) சுவாசப்பை (4) இருதயம் (.........)

27. உலக வரலாற்றிற்கேற்ப குடியேற்றவாத காலத்தில் உலகில் அதிக எண்ணிக்கையிலான நாடுகளை ஆக்கிரமித்து தனது அதிகாரத்தில் வைத்திருந்த அரசு இவற்றுள் எது?
(1) போர்த்துக்கல் (2) ஸ்பானியா
(3) பெரிய பிரித்தானியா (4) பிரான்ஸ் (.........)

28. பின்வருவனவற்றுள் பிறிக்ஸ் (BRICS) என்ற அமைப்பிற்கு உரிய ஐந்து நாடுகளைச் சரியாகக் குறிப்பிடுவது எது?
(1) பிரேசில், இரஷ்யா, இந்தியா, சீனா, தென் ஆபிரிக்கா
(2) பிரேசில், இரஷ்யா, இந்தியா, சீனா, தென் கொரியா
(3) பிரேசில், இரஷ்யா, இந்தோனேசியா, சீனா, சவூதி அரேபியா
(4) பிரேசில், இரஷ்யா, ஈரான், சீனா, தென் ஆபிரிக்கா (.........)

29. உலக மரபுரிமை இடங்களைப் பெயரிடும் ஐக்கிய நாடுகள் சபையின் உறுப்பு நிறுவனத்தினது சுருக்க பெயர் யாது?
(1) UNCHR (2) UNICEF (3) UNDP (4) UNESCO (.........)

30. ஞாயிற்றுத் தொகுதியில் கிழக்கிலிருந்து மேற்காக சுழலும் ஒரேயொரு கோள் எது?
(1) வெள்ளி (2) செவ்வாய் (3) சனி (4) நெப்டியூன் (.........)

[பக் 5 ஐப் பார்க்க.

- **31** தொடக்கம் **50** வரையிலான ஒவ்வொரு வினாவிற்குமான சரியான **விடையைத்** தரப்பட்டுள்ள **புள்ளிக் கோட்டின் மீது** சுருக்கமாக எழுதுக.

31. நான்கு தடவைகளாக இந்நாட்டின் பிரதம மந்திரி பதவிக்கு நியமிக்கப்பட்ட **முதலாவது** இலங்கை அரசியல்வாதி யார்?

.................................................................................................................................

32. இலங்கையினுள் சட்டத்துறை தொழிலில் ஈடுபடுவதற்கு எந்த நிறுவனத்தில் கட்டாயமாகப் பதிவு செய்தல் வேண்டும்?

.................................................................................................................................

33. புதிய உற்பத்தியாளர்களை ஊக்குவிப்பதற்காக 2015 ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் நடைபெற்ற ரே விஜேவர்த்தன ஞாபகார்த்த உற்பத்தியாளர் விருது விழாவின்போது சிறந்த புதிய உற்பத்தியாளருக்கான விருதை வெற்றி கொண்டவர் யார்?

.................................................................................................................................

34. தற்போது எந்த அமைச்சின் கீழ் இலங்கைப் பொலிஸ் திணைக்களம் உள்ளது?

.................................................................................................................................

35. இலங்கைக்குரிய மிகப் பெரிய தீவு எது?

.................................................................................................................................

36. 2015 ஆம் ஆண்டின் கான்ஸ் திரைப்பட விழாவிலே மிகப்பெரிய கௌரவத்தைப் பெற்ற இலங்கைத் தமிழ் அகதிகள் மூவரின் கதையைக் கொண்ட பிரான்சிய திரைப்படத்தின் பெயர் யாது?

.................................................................................................................................

37. உலக தொடர்பாடலில் புரட்சியொன்று ஏற்பட மூலகர்த்தாவான இந்நாட்டில் வசித்த எதிர்வுகூறலியலாளர் யார்?

.................................................................................................................................

38. தற்போதைய இலங்கை பாராளுமன்றக் கூட்டமொன்றில் இருக்க வேண்டிய பாராளுமன்ற உறுப்பினர்களின் குறைநிறைவெண் எவ்வளவு?

.................................................................................................................................

39. மரண சாதனங்கள் மற்றும் அட்டோனி தத்துவம் தொடர்பான ஆவணங்களைப் பொறுப்பெடுப்பதற்கு அதிகாரம் கொண்ட அரசாங்க திணைக்களம் எது?

.................................................................................................................................

40. இலங்கையின் வடமத்திய மாகாணத்தில் பெருமளவு பரவியுள்ள அசாதாரண சிறுநீரக நோய்க்குக் காரணமாகக் கருதப்படும் முக்கிய விவசாய இரசாயனம் யாது?

.................................................................................................................................

41. உரோம இலக்கங்களில் பிரதிநிதித்துவப்பட **முடியாத** இலக்கம் எது?

.................................................................................................................................

42. ஐக்கிய அமெரிக்க அரசின் தேசிய பாதுகாப்பு முகவரினால் வகைப்படுத்தப்பட்டிருந்த இரகசிய தகவல்களை உலகிற்கு வெளிப்படுத்திய கணினி வாண்மையாளர் யார்?

.................................................................................................................................

43. "ஏழு பில்லியன் கனவுகள், ஒரு கோள், பேண்தகு நுகர்வு" எனும் தொனிப் பொருளின் கீழ் இந்த வருடத்தில் கொண்டாடப்பட்ட சர்வதேச தினம் யாது?

.................................................................................................................................

[பக் 6 ஐப் பார்க்க.

44. சமாதான அரசியல் யாப்பை நடைமுறைப்படுத்தும் ஆசிய நாடு எது?

..........................................................................................................................................

45. உக்ரேன் புரட்சியாளர்களுக்கு உதவி வழங்கியது என்ற நம்பிக்கையினால் ஐக்கிய அமெரிக்க அரசுகளும் ஐரோப்பிய சங்கமும் அண்மையிலே பொருளாதார தடைகளை எந்த நாட்டுக்கு எதிராக விதித்தன?

..........................................................................................................................................

46. சர்வதேச தேதிக் கோடு எந்த சமுத்திரத்தினூடாகச் செல்வதாகக் கருதப்படுகிறது?

..........................................................................................................................................

47. உலக நீதிமுறை செயற்திட்ட சுட்டிக்கேற்ப தற்போது சட்டவாட்சியில் உயர்தரத்தை கொண்டுள்ள ஆசிய நாடு எது?

..........................................................................................................................................

48. உலகிலேயே அதிக சனத்தொகையைக் கொண்ட நகரம் எது?

..........................................................................................................................................

49. உலகிலே அபிவிருத்தியடைந்து வரும் நாடுகளுக்காக GSP வர்த்தக நன்மைகளை வழங்கும் வலய அமைப்பு யாது?

..........................................................................................................................................

50. ஐக்கிய நாடுகள் தாபனத்தின் மனித உரிமைகளுக்கான தற்போதைய உயர் ஸ்தானிகர் யார்?

..........................................................................................................................................

## பகுதி II - நுண்ணறிவு

- **51** தொடக்கம் **55** வரையுள்ள ஒவ்வொரு வினாவின் கீழேயும் குறித்த தொடர்புடன்கூடிய மும்மைச் சொல் ஒன்று தரப்பட்டுள்ளது. அந்த மும்மைச் சொற்களுக்கிடையே காணப்படும் தொடர்புக்கு மிகவும் நெருங்கிய தொடர்பொன்றைக் காட்டும் மும்மைச் சொற்களைத் தெரிவு செய்து அதற்குரிய தெரிவினது **இலக்கத்தை** வினாவின் எதிரேயுள்ள **புள்ளிக் கோட்டின் மீது** எழுதுக.

51. தொடுதல் : பற்றிப்பிடித்தல் : விடுவித்தல்
    (1) இருத்தல் : உறக்கம் : கனவு
    (2) சாபம் : கோபம் : அமைதியின்மை
    (3) அதிகாலை : இரவு : பகல்
    (4) புன்னகை : சிரிப்பு : அழுகை
    (.........)

52. வேட்டையாடல் : உல்லாசம் : வலி
    (1) இறத்தல் : நோய் : பயம்
    (2) விளையாட்டு : பயிற்சி : ஊக்கம்
    (3) திருட்டு : இலாபம் : நட்டம்
    (4) மழைவீழ்ச்சி : வெள்ளம் : வரட்சி
    (.........)

53. கை : தலை : விரல்
    (1) பந்து : துடுப்பு மட்டை : விளையாட்டுத்திடல்
    (2) இலை : மரம் : விதை
    (3) வகுப்பு : பாடசாலை : மாணவன்
    (4) முறைப்பாடு : சாட்சி : தீர்ப்பு
    (.........)

54. போட்டி : வெற்றி : பிரபல்யம்
    (1) உடற்பயிற்சி : களைப்பு : ஓய்வு
    (2) ஆவியாதல் : முகில் : மழை
    (3) கண்காட்சி : ஆக்கம் : விருது
    (4) வானவெளி : சுழலுதல் : அசைதல்
    (.........)

55. புகைப்படம் : மணிக்கூடு : சுவர்
    (1) தலையணை : மெத்தை : கட்டில்
    (2) பேனை : பென்சில் : பயிற்சிகள்
    (3) பொலிஸ் : நீதிமன்றம் :சட்டம்
    (4) பந்தி : வசனம் : எழுத்து
    (.........)

[பக் 7 ஐப் பார்க்க.

● **56** தொடக்கம் **60** வரையிலான வினாக்கள் *A, B, C, D, E* என்ற ஐந்து மோதிரங்களிடையே காணப்படுகின்ற நிறை தொடர்பான விடயங்கள் சிலவற்றை விபரிக்கும் **I, II, III, IV, V** என்றவாறான கீழே தரப்பட்ட சில கூற்றுக்களை அடிப்படையாகக் கொண்டவை.

**I.** *A* என்ற மோதிரத்தின் நிறையானது *B* என்ற மோதிரத்தின் நிறையின் இரு மடங்காகும்.

**II.** *B* என்ற மோதிரத்தின் நிறையானது, *C* என்ற மோதிரத்தின் நிறையின் நான்கரை மடங்காகும்.

**III.** *C* என்ற மோதிரத்தின் நிறையானது, *D* என்ற மோதிரத்தின் நிறையின் சரி அரைவாசியாகும்.

**IV.** *D* என்ற மோதிரத்தின் நிறையானது, *E* என்ற மோதிரத்தின் நிறையின் சரி அரைவாசியாகும்.

**V.** *E* என்ற மோதிரத்தின் நிறையானது, *A* என்ற மோதிரத்தின் நிறையை விட குறைவாயினும் *C* என்ற மோதிரத்தின் நிறையை விட மிகக்கூடியது.

இந்த தகவல்களுக்கேற்ப கீழேயுள்ள ஒவ்வொரு வினாவிற்குமான சரியான விடையைத் தெரிவு செய்து அதற்குரிய தெரிவினது **இலக்கத்தை** வினாவின் எதிரேயுள்ள **புள்ளிக் கோட்டின் மீது** எழுதுக.

**56.** இந்த ஐந்து மோதிரங்களுள் நிறையில் மிகவும் கூடிய மோதிரம் எது?
(1) *A* (2) *B* (3) *C* (4) *D* (.........)

**57.** *E* என்ற மோதிரத்தைவிட நிறையில் குறைந்த **இரு** மோதிரங்களும் எவை?
(1) *A, D* (2) *B, C* (3) *B, D* (4) *C, D* (.........)

**58.** நிறையில் கூடிய மோதிரத்தில் இருந்து நிறையில் குறைந்த மோதிரம் வரை மேல் இருந்து கீழாக இந்த ஐந்து மோதிரங்களையும் ஒழுங்கமைக்கும்போது மேலிருந்து நான்காவதாக இருக்கும் மோதிரம் எது?
(1) *B* (2) *C* (3) *D* (4) *E* (.........)

**59.** நிறை அதிகரிக்கும் ஒழுங்குமுறைக்கு இந்த ஐந்து மோதிரங்களையும் ஒழுங்கமைப்பதற்காக தரப்பட்ட கூற்றுகளுள் முக்கியம் **அல்லாத** கூற்று எது?
(1) **I** (2) **III** (3) **IV** (4) **V** (.........)

**60.** கீழேயுள்ள கூற்றுகளுள் நிச்சயமாக உண்மையான கூற்று எது?
(1) *B* என்ற மோதிரத்தின் நிறை, *D* என்ற மோதிரத்தின் நிறையை விடக்குறைவானது.
(2) *C* என்ற மோதிரத்தின் நிறை, *E* என்ற மோதிரத்தின் நிறையை விடக்குறைவானது.
(3) *D* என்ற மோதிரத்தின் நிறை, *C* என்ற மோதிரத்தின் நிறையை விடக்குறைவானது.
(4) *E* என்ற மோதிரத்தின் நிறை, *D* என்ற மோதிரத்தின் நிறையை விடக்குறைவானது. (.........)

● **61** தொடக்கம் **65** வரையுள்ள ஒவ்வொரு வினாவின் கீழேயும் **I, II, III** என்றவாறான மூன்று கூற்றுகளும் அவற்றிற்கிடையே காணக்கூடிய தொடர்பை விபரிக்கும் நான்கு விடைகளும் தரப்பட்டுள்ளன. அவற்றுள் அந்த மூன்று கூற்றுகளிடையே காணக்கூடிய தொடர்பை மிகவும் நல்ல முறையில் விபரிக்கும் கூற்றைத் தெரிவு செய்து அதற்குரிய தெரிவினது **இலக்கத்தை** வினாவின் எதிரேயுள்ள **புள்ளிக் கோட்டின் மீது** எழுதுக.

**61.** கூற்று **I** : உதயராணி தற்போது 40 வயதைக் கடந்த சட்டத்தரணியாவார்
**II** : திலகன் திருமணம் முடித்து இருப்பது தற்போது 40 வயதைக் கடந்த சட்டத்தரணி உடனாகும்.
**III** : உதயராணிக்கு 40 வயதானது, அவர் திலகனை திருமணம் முடித்து 15 வருடங்கள் கடந்த பின்னராகும்.
(1) **I** உண்மையாகும்போது, **II** இன் உதவியுடன் **III** ஐ உண்மை என நிரூபிக்க முடியும்.
(2) **I** உண்மையாகும்போது, **III** இன் உதவியுடன் **II** ஐ உண்மை என நிரூபிக்க முடியும்.
(3) **II** உண்மையாகும்போது, **I** இன் உதவியுடன் **III** ஐ உண்மை என நிரூபிக்க முடியும்.
(4) **II** உண்மையாகும்போது, **I** இன் உதவியுடன் **III** ஐ தவறு என நிரூபிக்க முடியும். (.........)

**62.** கூற்று **I** : சட்டக் கல்வி நிறுவனத்தில் கல்வி பயிலும் சகல மாணவர்களும் குறைந்த பட்சம் தொழிலாளர் சட்டம் அல்லது ஒப்பந்த சட்டம் ஆகியவற்றுள் ஏதாவது ஒரு பாடநெறியையாவது பயிலுவார்கள்.
**II** : சட்டக் கல்வி நிறுவனத்தில் கல்வி பயிலும் மாணவர்களுள் 75%ஆனோர் ஒப்பந்த சட்டத்தைப் பயிலுகின்றனர்.
**III** : சட்டக் கல்வி நிறுவனத்தில் கல்வி பயிலும் மாணவர்களுள் 50% ஆனோர் தொழிலாளர் சட்டத்தைப் பயிலுகின்றனர்.
(1) **I, II, III** ஆகிய மூன்றும் ஒன்றாக உண்மையாகும்.
(2) **I** உண்மையாக வேண்டுமெனின், **II** உண்மையாகும்போது **III** பொய்யாகும்.
(3) **I** உண்மையாக வேண்டுமெனின் கட்டாயமாக **II, III** ஆகியவை பொய்யாகும்.
(4) **I** உண்மையாகவோ அல்லது தவறாகவோ இருந்தாலும் **II** உண்மை எனின் **III** உம் உண்மையாக இருக்க முடியும். (.........)

[பக் 8 ஐப் பார்க்க.

63. கூற்று I : நடைமுறைக் கணக்கைக் கொண்டுள்ள சகலரும் சேமிப்பு கணக்கிற்கும் உரித்துடையவர்கள்
II : சுந்தரிக்கு நடைமுறைக் கணக்கு மட்டும் உள்ளது
III : அங்கஜனுக்கு இருப்பது சேமிப்பு கணக்கு மட்டுமேயாகும்.

(1) I உண்மையாகும்போது, II உண்மையாகவும் III பொய்யாகவும் இருக்கும்.
(2) I உண்மையாகும்போது, II பொய்யாகவும் III உண்மையாகவும் இருக்கும்.
(3) I உண்மையாகும்போது, II மற்றும் III ஒருமித்து உண்மையாகும்
(4) I உண்மையாகும்போது, II மற்றும் III ஒருமித்து பொய்யாகும். (.........)

64. கூற்று I : திரு.பிரபாகரனால் சட்டத்தின் மூலதத்துவங்கள் தொடர்பாக அதிக எண்ணிக்கையிலான புத்தகங்கள் எழுதப்பட்டுள்ளன.
II : "நிர்வாக சட்டமூலதத்துவம்" என்ற புத்தகம் திரு. பிரபாகரனால் எழுதப்பட்டது.
III : திரு.பிரபாகரனால் எழுதப்பட்டிருப்பது சட்டத்திலே இதிகாச பரிணாமம் தொடர்பான புத்தகங்கள் மட்டுமேயாகும்.

(1) I உண்மையாகுமெனின் II உண்மையாக இருக்க முடியாது.
(2) I, II ஆகிய உண்மையாகுமெனின் III உம் உண்மையாக இருக்க முடியும்.
(3) III உண்மையாக இருக்க முடிவது I பொய்யாக இருந்தால் மட்டுமேயாகும்.
(4) I, II, III ஆகிய மூன்றும் ஒருமித்து உண்மையாக இருக்க முடியும். (.........)

65. கூற்று I : வேணுஜா பிறந்தது சனிக்கிழமையொன்றிலாகும்.
II : கடந்த வருடம் வேணுஜாவின் பிறந்தநாள் வந்தது சனிக்கிழமை நாளொன்றிலாகும்.
III : அடுத்த வருடம் வேணுஜாவின் பிறந்தநாள் வருவது சனிக்கிழமையொன்றில் இல்லை.

(1) I உண்மையாகுமெனின் II, III ஆகியன உண்மையாக இருக்க முடியும்.
(2) I பொய்யாகுமெனின் II, III பொய்யாக இருக்க முடியும்.
(3) I பொய்யாகுமெனின், III உண்மையாக இருக்க முடியாது.
(4) I உண்மை அல்லது பொய்யாக இருப்பினும் II உண்மை எனின் III உண்மையாக இருக்க முடியும். (.........)

● **66 தொடக்கம் 70 வரையிலான ஒவ்வொரு வினாவிற்குமான சரியான விடையைத் தெரிவு செய்து அதற்குரிய இலக்கத்தை வினாவின் எதிரேயுள்ள புள்ளிக் கோட்டின் மீது எழுதுக.**

66. கிழமையின் ஒவ்வொரு நாளிலும் $P$ என்ற புகையிரத நிலையத்தில் இருந்து ஒவ்வொரு இரண்டரை மணித்தியாலத்திற்குமொருமுறை $Q$ என்ற புகையிரத நிலையத்திற்கு புகையிரதமொன்று புறப்படும். குறித்தவொரு சந்தர்ப்பமொன்றிலே $Q$ என்ற புகையிரத நிலையத்திற்குச் செல்லும் புகையிரதம் அதற்கு 40 நிமிடங்களுக்கு முன்னர் பயணத்தை ஆரம்பித்ததுடன் அடுத்த புகையிரதம் 18.00 மணிக்கு புறப்பட்டதாகவும் $P$ என்ற புகையிரத நிலையத்தில் அறிவிப்பு செய்யப்பட்டது. அவ்வாறெனின் அந்த அறிவிப்பு வெளியாகிய சந்தர்ப்பத்தில் என்ன நேரமாக இருக்க முடியும்?

(1) 1600 மணி (2) 1610 மணி (3) 1620 மணி (4) 1640 மணி (.........)

67. மாணவிகளின் வரிசையொன்றில் இடது பக்க ஓரத்தில் இருந்து திலகவதி ஒன்பதாவதாக நிற்கின்றார். அந்த வரிசையிலே வலது பக்க ஓரத்தில் இருந்து பதின்மூன்றாவதாக நிற்பவர் கமலாதேவியாகும். மேலும் அவர்கள் இருவரும் தாம் நிற்கும் இடங்களை ஒருவருக்கொருவர் மாற்றிக் கொண்டதோடு அப்போது திலகவதியின் இடம் இடது பக்க ஓரத்தில் இருந்து பதினேழாவதாக மாற்றமடைந்தது. அவ்வாறெனின் அந்த இடமாற்றங்களின் பின்னர் கமலாதேவி இருப்பது வரிசையின் வலது பக்க ஓரத்தில் இருந்து எத்தனையாவது ஆளாகவாகும்?

(1) 21 (2) 23 (3) 26 (4) 29 (.........)

68. பிரியா மற்றும் வதனா ஆகியோர் ஒரே வேலைத்தளத்திலே ஒரே நாளிலே இரு பதவிகளில் நியமனத்தைப் பெற்றுக் கொண்ட இரு நண்பிகளாகும். அவர்களுள் பிரியாவின் சம்பளமானது ஒவ்வொரு வருடமும் 250 ரூபாய்படி அதிகரிப்பதுடன் வதனாவினது சம்பளமானது ஒவ்வொரு வருடமும் 200 ரூபாய் படியும் அதிகரிக்கின்றன. அவர்கள் இருவரினதும் சம்பளங்கள் ஐந்து வருடங்களில் ஒரே மட்டத்திற்கு வந்தடைந்திருப்பின் அவர்களிடையேயான சம்பள வித்தியாசம் 100 ரூபாய்கள் ஆவது அவர்கள் நியமனம் பெற்று எத்தனை வருடங்களிலாகும்?

(1) 5 (2) 4 (3) 3 (4) 2 (.........)

69. 210 கிலோமீற்றர் பயணஞ் செய்யும் மோட்டார் வாகனமொன்றிற்கு அதன் வேகத்தை மணித்தியாலத்திற்கு 5 கிலோமீற்றரால் அதிகரித்தால் மொத்த பயணத்தை ஒரு மணித்தியாலத்திற்கு முன்னர் நிறைவு செய்து கொள்ள முடியும். அவ்வாறெனின் வாகனத்தின் ஆரம்ப வேகம் மணித்தியாலத்திற்கு எத்தனை கிலோமீற்றர்களாகும்?

(1) 20 (2) 25 (3) 30 (4) 35 (.........)

70. பறவைக் கூட்டமொன்று இரு மரங்களின் கிளைகளின் மீது அமர்ந்து இருப்பது அந்த இரு மரங்களுக்கிடையில் எந்தவொரு மரத்திலும் இருக்கும் எந்தவொரு குருவியும் அந்த மரத்திலே இருக்கின்ற வேறு எந்தவொரு குருவிக்கும் சமதூரத்திலே அமையுமாறாகும். இரு மரங்களிலும் இந்த கூட்டத்திற்குரிய குருவிகள் மட்டுமே இருப்பின் அந்த கூட்டத்திற்கு உரித்துடையதான குருவிகளின் உச்ச எண்ணிக்கை எவ்வளவு?

(1) 4 (2) 6 (3) 8 (4) 10 (.........)

[பக் 9 ஐப் பார்க்க.

● **71** தொடக்கம் **75** வரையிலான வினாக்கள் குறித்தவொரு தொடர்மாடி வீட்டில் வசித்து வருகின்ற தொழிலில் ஈடுபடும் எட்டுபேர் தொடர்பான தகவல்களை அடிப்படையாகக் கொண்டவை.

✤ கீழ் மாடி, முதலாம் மாடி, இரண்டாம் மாடி என்றவாறான மூன்று மாடிகளைக் கொண்டுள்ள வீடொன்றில் ஒவ்வொரு மாடியிலும் குறைந்த பட்சம் மூன்று வீடுகளும் அல்லது ஆறுக்கு மேற்படாத எண்ணிக்கையிலானவாறான வீடுகள் பதின்மூன்று அமைந்துள்ளன.

✤ அவற்றுள் ஐந்து வீடுகளில் எவரும் வசிக்காததோடு எஞ்சிய எட்டு வீடுகளிலும் ஒரு வீட்டில் ஒரு தொழிலில் ஈடுபடுபவர் என்றவாறு சட்டத்தரணிகள் இருவர், பொறியிலாளர் இருவர், கணக்காளர்கள் மூவர் மற்றும் ஒரு வைத்தியர் ஆகியோர் கீழே காட்டியவாறு வசித்து வருகின்றனர்.

- ✻ இரண்டாம் மாடியிலே அமைந்துள்ள நான்கு வீடுகளில் ஒன்றில் சட்டத்தரணியொருவர் வசித்து வருவதுடன் அந்த சட்டத்தரணியுடன் அந்த மாடியிலே வசித்து வருவது மேலும் ஒரு தொழில் செய்பவர் மட்டுமேயாகும்.
- ✻ சட்டத்தரணிகள் இருவரும் வசித்து வருவது ஒன்றிற்கொன்று அடுத்துள்ளதாக அமைந்துள்ள இரு மாடிகளில் அமைந்துள்ள இரு வீடுகளிலாகும்.
- ✻ வைத்தியர் வசித்துவரும் வீடு உள்ள மாடியிலே அமைந்துள்ள வேறெந்த வீட்டிலும் சட்டத்தரணி வசித்து வரவில்லை.
- ✻ எந்தவொரு மாடியிலும் அமைந்துள்ள இரு வீடுகளில் ஒரே தொழிலில் ஈடுபடும் இருவர் வசிப்பதில்லை.
- ✻ முதலாவது மாடியிலே அமைந்துள்ள ஒவ்வொரு வீட்டிலும் குறித்த தொழிலைச் செய்பவர் ஒருவர் என்றவாறு வசித்து வருகின்றனர்.

இந்த தகவல்களுக்கு ஏற்ப கீழேயுள்ள ஒவ்வொரு வினாவிற்குமான சரியான விடையைத் தெரிவு செய்து அதற்குரிய தெரிவினது **இலக்கத்தை** வினாவின் எதிரேயுள்ள **புள்ளிக் கோட்டின்மீது** எழுதுக.

71. முதலாவது மாடியிலே அமைந்துள்ள வீடுகளின் எண்ணிக்கை எவ்வளவு?
(1) 3 (2) 4 (3) 5 (4) 6 (.........)

72. கீழ் மாடியிலே தொழில் செய்பவர்கள் வசித்து **வராத** எத்தனை வீடுகள் உள்ளன?
(1) 1 (2) 2 (3) 3 (4) 4 (.........)

73. கீழ் மாடியிலே வசித்து வரும் தொழில் செய்பவர்கள் யார்?
(1) சட்டத்தரணியும் பொறியியலாளரும் (2) சட்டத்தரணியும் கணக்காளரும்
(3) சட்டத்தரணி, கணக்காளர், பொறியிலாளர் (4) வைத்தியர். கணக்காளர், பொறியியலாளர் (.........)

74. முதலாவது மாடியிலே வசித்து **வராத** தொழிலாளர் யார்?
(1) கணக்காளர் (2) வைத்தியர் (3) பொறியியலாளர் (4) சட்டத்தரணி (.........)

75. ஒன்றுக்கொன்று அடுத்து அமைந்துள்ள இரு மாடிகளில் மட்டும் வசித்து வரும் தொழிலாளர்கள் யார்?
(1) சட்டத்தரணி மற்றும் கணக்காளர் (2) சட்டத்தரணி மற்றும் பொறியியலாளர்
(3) சட்டத்தரணி மற்றும் வைத்தியர் (4) கணக்காளர் மற்றும் பொறியியலாளர் (.........)

● **76** தொடக்கம் **80** வரையுள்ள வினாக்கள் மும்மைத் தொடையினுள் அடங்கியுள்ள தொடைகள் ஒவ்வொன்றின் இடையேயும் காணப்படும் தொடர்பைக் குறிப்பிடக்கூடிய முறையைக் குறிப்பிடும் கீழேயுள்ள ஐந்து வரிப்படங்கள் மற்றும் அது தொடர்பான தகவல்களை அடிப்படையாகக் கொண்டவை.



- ✻ கீழேயுள்ள ஒவ்வொரு வினாவிலும் தொடை மும்மைகள் நான்கு தரப்பட்டுள்ளன.
- ✻ அவற்றுள் மூன்று மும்மைத் தொடைகள் மட்டும் இங்கே தரப்பட்டுள்ள மூன்று வரிப்படங்களால் குறிப்பிடப்பட முடியும்.

இந்த முறைக்கேற்ப இங்கு குறிப்பிடப்படும் எந்தவொரு வரிப்படத்தினாலும் குறிப்பிடப்பட **முடியாத** எஞ்சிய மும்மைத் தொடையைத் தெரிவு செய்து, அதற்குரிய தெரிவினது **இலக்கத்தை** வினாவின் எதிரேயுள்ள **புள்ளிக் கோட்டின் மீது** எழுதுக.

76. (1) அத்தியாயம், பந்தி, வசனம் (2) வைத்தியசாலை, ஆண்தாதி அலுவலர், வைத்தியர்
(3) நிகழ்காலம், இறந்தகாலம், எதிர்காலம் (4) சட்டத்தரணி, எழுத்தாளர். பாடகர் (.........)

[பக் 10 ஐப் பார்க்க.

77. (1) வருடம், மாதம், கிழமை
(2) முழுஎண்கள், ஒற்றை எண்கள், சதுர எண்கள்
(3) ஆடைகள். சாறி. காற்சட்டை
(4) பல்கோணி, முக்கோணி, வட்டம் (.........)

78. (1) விதை, காய், மரம்
(2) பாராளுமன்றம், படைக்கலைச் சேவகன், சபாநாயகர்
(3) மேல் நீதிமன்றம், மேல்முறையீட்டு நீதிமன்றம், உயர் நீதிமன்றம்
(4) கவிதைப் புத்தகம், சிறுகதைப் புத்தகம், ஆங்கில மொழி மூல புத்தகங்கள் (.........)

79. (1) மரத்தளபாடங்கள், காகிதாதிகள், விவசாயப் பொருட்கள்
(2) தாவர உண்ணிகள், நிலத்தில்வாழ் உயிரினம், முலையூட்டிகள்
(3) குடியியல் சட்டம், சொத்துச் சட்டம், குற்றவியல் சட்டம்
(4) சதுரம், இணைகரம், சாய்சதுரம் (.........)

80. (1) அமைச்சர்கள், பாராளுமன்ற உறுப்பினர்கள், அரசியல்வாதிகள்
(2) தரைநிலம், வனப்பகுதி, பாலைவனம்
(3) நீதிபதி, மாவட்ட நீதிபதி, சமாதான நீதவான்
(4) உணவு, காபோவைதரேற்று உணவுகள், புரோட்டின் அடங்கிய உணவுகள் (.........)

- **81** தொடக்கம் **85** வரையிலான ஒவ்வொரு வினாவின் **கீழேயும்** தளவாடியின் எதிரே தெரியும் உருவத் தொகுதிகள் தரப்பட்டுள்ளன. அந்தந்த உருவ தொகுதிகளைத் தளவாடியில் பார்க்கும்போது தெரியக்கூடிய அதன் சரியான விம்பத்தை தெரிவு செய்து அதற்குரிய தெரிவினது **இலக்கத்தை** வினாவின் எதிரேயுள்ள **புள்ளிக் கோட்டின் மீது** எழுதுக.

81. (1) (2) (3) (4) (.........)

82. (1) (2) (3) (4) (.........)

83. (1) (2) (3) (4) (.........)

84. (1) (2) (3) (4) (.........)

[பக் 11 ஐப் பார்க்க.

85. 

(1) (2) (3) (4) (.........)

● **86** தொடக்கம் **90** வரையிலான வினாக்கள் மையத்தில் இருந்து சமதூரத்தில் அமைந்துள்ள எட்டுப் பகுதிகளால் அமைக்கப்பட்ட வட்டவடிவ பகுதிகள் நான்கைக் கொண்ட வட்ட கோலத்தினுள் எண்கள் இடப்பட்ட முறையைக் காட்டும் கீழேயுள்ள வரிப்படம் மற்றும் அது தொடர்பான தகவல்களை அடிப்படையாகக் கொண்டவை.




* இந்த வட்டக் கோலத்திலே ஒவ்வொரு வட்டவடிவ பகுதியினுள்ளும் 1 தொடக்கம் 9 வரையுள்ள எண்களுள் எந்தவொரு எட்டு எண்கள் மட்டுமே இடப்படும்.
* அப்போது குறித்த வட்டவடிவ பகுதியில் இல்லாத எண் அதற்கு அடுத்துள்ள வட்டவடிவ பகுதியில் கட்டாயமாக இருக்க வேண்டும்.
* அவ்வாறே இங்கு ஒரு ஆரைச்சிறைப்பகுதியில் நான்கு பகுதிகள் உள்ளடங்குமாறு எட்டு ஆரைச்சிறைப்பகுதிகள் உள்ளன.
* அந்த ஒவ்வொரு ஆரைச்சிறைப் பகுதியினுள்ளும் ஒரே எண்ணானது ஒரு தடவைக்கு மேல் இடப்படலாகாது.
* இந்த நிபந்தனைகளுக்கு உட்படுமாறு ***A, B, C, D, E, F*** என்ற ஆங்கில எழுத்துக்களினால் காட்டப்பட்டுள்ள இடங்களில் அந்தந்த இடங்களுக்குரிய குறித்த எண்ணொன்று இடப்படும்.

இந்தத் தகவல்களுக்கு ஏற்ப கீழேயுள்ள ஒவ்வொரு வினாவிற்குமான சரியான விடையைத் தெரிவு செய்து அந்த **விடையை** வினாவின் எதிரேயுள்ள **புள்ளிக் கோட்டின் மீது இலக்கத்தில் மட்டும்** எழுதுக.

86. ***A*** என்ற எழுத்துடனான இடத்திற்கு இடப்படும் எண் யாது? (.........)

87. ***B*** என்ற எழுத்துடனான இடத்திற்கு இடப்படும் எண் யாது? (.........)

88. ***C*** என்ற எழுத்துடனான இடத்திற்கு இடப்படும் எண் யாது? (.........)

89. ***D*** என்ற எழுத்துடனான இடத்திற்கு இடப்படும் எண் யாது? (.........)

90. ***F*** என்ற எழுத்துடனான உள்ள பகுதியில் **6** என்ற எண் இடப்பட **முடியாதெனின்** ***E*** என்ற எண் உள்ள இடத்திற்கு இடப்படக்கூடிய எண் யாது? (.........)

● **91** தொடக்கம் **95** வரையுள்ள ஒவ்வொரு வினாவின் கீழேயும் குறித்தவொரு பிரசினமும் **I , II** என்றவாறான இரு கூற்றுக்களும் தரப்பட்டுள்ளன. அந்த இரு கூற்றுக்களிலும்

* கூற்று **I** ஐ மட்டும் பயன்படுத்தி பிரசினத்தை தீர்க்க முடியுமெனின் இலக்கம் **1** ஐயும்,
* கூற்று **II** ஐ மட்டும் பயன்படுத்தி பிரசினத்தை தீர்க்க முடியுமெனின் இலக்கம் **2** ஐயும்,
* **I, II** ஆகிய இரண்டையும் ஒன்றாகப் பயன்படுத்தி பிரசினத்தை தீர்க்க முடியுமெனின் இலக்கம் **3** ஐயும்,
* **I, II** ஆகிய இரண்டையும் வெவ்வேறாப் பயன்படுத்தி பிரசினத்தை தீர்க்க முடியுமெனின் இலக்கம் **4** ஐயும்,
* **I, II** ஆகிய எந்தவொன்றையும் பயன்படுத்தி பிரசினத்தை தீர்க்க **முடியாதெனின்** இலக்கம் **5** ஐயும்

ஒவ்வொரு வினாவின் எதிரேயுள்ள **புள்ளிக் கோட்டின் மீது** எழுதுக.

91. **பிரசினம் :** தவம்,மாதன். தேவன், சேகர் என்ற நான்கு மாணவர்களிடையே நிறையில் கூடிய மாணவனினது நிறை 40 கிலோகிராம்களாகும். அவ்வாறெனின் அவர்களுள் உள்ள நிறையில் குறைந்த மாணவனின் நிறை எத்தனை கிலோகிராம்களாகும்?

**கூற்று** : **I.** மாதவனினதும் சேகரினதும் நிறைகளின் கூட்டுத்தொகையானது தேவனின் நிறையை விட 20 கிலோகிராம்களால் கூடியது.

**II.** சேகரினதும் தேவனினதும் நிறைகளின் கூட்டுத்தொகையானது தவத்தினது நிறையை விட 20 கிலோகிராம்களால் கூடியது. (.........)

[பக் 12 ஐப் பார்க்க.

92. **பிரசினம் :** குறித்தவொரு பாத்திரத்தில் வைக்கப்பட்டுள்ள நீலம், சிவப்பு, பச்சை நிறப் பொத்தான்களில் 150 சிவப்பு நிறமாகும். அந்தப் பாத்திரத்தில் உள்ள மொத்த பொத்தான்களின் எண்ணிக்கை எவ்வளவு?

**கூற்று** : **I.** பாத்திரத்தில் வைக்கப்பட்டுள்ள பொத்தான்களில் 50% நீலநிறமாகும்

**II.** பாத்திரத்தில் வைக்கப்பட்டு உள்ள பொத்தான்களில் 350 பச்சை நிறமாகும். (.........)

93. **பிரசினம் :** குறித்தவொரு மரதன் ஓட்டப் போட்டியொன்றிலே கலந்து கொண்ட விளையாட்டு வீரர்களில் சிலர் இடை நடுவே இடைநிறுத்தியதுடன் மேலும் சிலர் போட்டியை நிறைவு செய்தனர். அந்த மரதன் ஓட்டப் போட்டியில் கலந்து கொண்ட மொத்த விளையாட்டு வீரர்களின் எண்ணிக்கை எவ்வளவு?

**கூற்று** : **I.** போட்டியில் கலந்து கொண்ட விளையாட்டு வீரர்களுள் 30 பேர் இடை நடுவே இடைநிறுத்திக் கொண்டனர்.

**II.** மேலும் 45 விளையாட்டு வீரர்கள் போட்டியை நிறைவு செய்திருந்தால் போட்டியை நிறைவு செய்த விளையாட்டு வீரர்களின் எண்ணிக்கை 50% இனால் அதிகரித்து இருக்கும். (.........)

94. **பிரசினம் :** கடந்த வருடத்திலே வருடாந்த கூட்டத்திற்கு கலந்து கொண்டவர்களின் மொத்த எண்ணிக்கை 5600 ஆகும். அந்தக் குழுவினரிடையே உள்ள பெண்களின் எண்ணிக்கை எவ்வளவு?

**கூற்று** : **I.** கூட்டத்தில் கலந்து கொண்ட ஆண்களின் எண்ணிக்கையானது அதில் கலந்து கொண்ட பெண்களின் எண்ணிக்கையை விட 2800 இனால் அதிகமாகும்.

**II.** கூட்டத்தில் கலந்து கொண்ட ஆண்களின் எண்ணிக்கையானது அதில் கலந்து கொண்ட பெண்களின் எண்ணிக்கையின் மூன்றுமடங்காகும். (.........)

95. **பிரசினம் :** *P, Q* என்ற இருவரும் ஒன்று சேர்ந்து எட்டு மணித்தியாலங்களில் 100 பக்க அறிக்கையை முழுமையாக தட்டச்சிட முடியும். *P* மட்டும் தனித்து தட்டச்சிட்டால் அதற்காக செலவாகும் நேரம் எத்தனை மணித்தியாலங்களாகும்?

**கூற்று** : **I.** *Q* மட்டும் தனித்து 100 பக்க அறிக்கையை தட்டச்சிட்டால் அதற்காக 12 மணித்தியாலங்கள் எடுக்கும்.

**II.** *P, Q* ஆகிய இருவரும் ஒருமித்து 200 பக்க அறிக்கையை தட்டச்சிட்டால் அதற்காக 16 மணித்தியாலங்கள் எடுக்கும். (.........)

● **96** தொடக்கம் **100** வரையுள்ள ஒவ்வொரு வினாவிற்குமான சரியான விடையைக் கண்டு அந்த **விடையை** வினாவின் எதிரேயுள்ள **புள்ளிக் கோட்டின்மீது இலக்கத்தில் மட்டும்** எழுதுக.

96. 1 தொடக்கம் 100 வரையுள்ள சகல எண்களையும் எழுதினால் அதில் 3 என்ற எண் எழுதப்படும் தடவைகளின் எண்ணிக்கை எவ்வளவாகும்? (.........)

97. *A* என்ற நகரத்தில் இருந்து புறப்பட்ட பேருந்தொன்றில் உள்ள ஆண்களின் எண்ணிக்கையானது அப்போது அந்த பேருந்தில் உள்ள பெண்களின் எண்ணிக்கையின் இரு மடங்காகும். *B* என்ற நகரத்திலே அந்தப் பேருந்தில் இருந்து 10 ஆண்கள் இறங்கிச் சென்றதுடன் 5 பெண்கள் அந்தப் பேருந்தில் ஏறினார்கள். அப்போது அந்தப் பேருந்தில் இருந்த ஆண்கள் மற்றும் பெண்களின் எண்ணிக்கைகள் ஒன்றிற்கொன்று சமனாகும். அவ்வாறெனின் *A* என்ற நகரில் இருந்து புறப்படும்போது அந்தப் பேருந்தில் இருந்த மொத்த ஆண்களினதும் பெண்களினதும் எண்ணிக்கை எவ்வளவு? (.........)

98. சாந்தனிடம் உள்ள பணத்தின் மூலம் செலுத்த முடியுமாய் இருப்பது அவருக்கு செலுத்த வேண்டிய பணத்தின் 75% இனை மட்டுமேயாகும். இன்னும் 8 ரூபாய்கள் இருப்பின் அவருக்கு செலுத்த வேண்டியுள்ள பணத்தின் 80% இனைச் செலுத்த முடியும். அவ்வாறெனின் சாந்தனிடம் உள்ள பணம் எத்தனை ரூபாய்களாகும்? (.........)

99. 3 மாம்பழங்களையும் 5 கொய்யாப்பழங்களையும் 4 விளாம்பழங்களையும் விலைக்கு வாங்க 590 ரூபாய்கள் செலவாகும். 3 மாம்பழங்களையும் 1 கொய்யாப்பழத்தையும் 2 விளாம்பழத்தையும் விலைக்கு வாங்குவதற்கு 310 ரூபாய்கள் செலவாகும். அவ்வாறெனின் 2 மாம்பழங்கள் 2 கொய்யாப்பழங்கள் 2 விளாம்பழங்களையும் விலைக்கு வாங்க செலவாகும் பணம் எத்தனை ரூபாய்களாகும்? (.........)

100. குறித்தவொரு வாகன சாரதியொருவர் *A* என்ற நகரத்திலே இருந்து *B* என்ற நகரத்திற்குச் செல்வதற்கு நான்கு பாதைகளைக் காண்கிறார். அவ்வாறே *B* என்ற நகரத்தில் இருந்து *C* என்ற நகரத்திற்கு செல்வதற்கு மூன்று பாதைகளைக் காண்கிறார். மேலும் *C* என்ற நகரத்தில் இருந்து *D* என்ற நகரத்திற்குச் செல்வதற்கு இரு பாதைகளைக் காண்கிறார். அவ்வாறெனின் அந்த வாகனச் சாரதி *A* என்ற நகரத்தில் இருந்து *D* என்ற நகரத்திற்கு செல்வதற்கு உள்ள ஒன்றில் இருந்து ஒன்று வேறுபட்ட எத்தனை பாதைகளைக் காண முடியும்? (.........)

* * *